# श्री मीनाक्षीपञ्चरत्नम्

# ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம்

(1)

उद्यद्भानुसहस्रकोटिसदृशां केयूरहारोज्ज्वलां
बिम्बोष्ठीं स्मितदन्तपङ्क्तिरुचिरां पीताम्बरालंकृताम् ।
विष्णुब्रह्मसुरेन्द्रसेवितपदां तत्वस्वरूपां शिवां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारान्निधिम् ॥

உத்யத்பானுஸஹஸ்ரகோடி ஸத்ருசாம்
கேயூரஹாரோஜ்வலாம்
பிம்போஷ்டீம் ஸ்மிததந்த பங்க்திருசிராம்
பீதாம்பராலங்க்ருதாம்।
விஷ்ணு ப்ரஹ்மஸுரேந்த்ர ஸேவிதபதாம்
தத்வஸ்வரூபாம் சிவாம்
மீனாக்ஷீம் ப்ரணதோऽஸ்மி ஸந்ததமஹம்
காருண்யவாராம் நிதிம்॥

ஆயிரம் ஆயிரம் சூர்யர்கள் உதித்தது போல் இருப்பவளும், தோள்வளை, முக்தாஹாரம் இவற்றையணிந்தவளும், கோவைப்பழம் போன்ற உதடும், சுத்த வெள்ளை புன்முறுவல், பீதாம்பரம் இவற்றால் அழகியவளும், விஷ்ணு, பிரம்மா, இந்த்ரன் இவர்கள் ஸேவிக்கும் தத்வஸ்வரூபமுள்ள, மங்கள கருணைக் கடலை - ஸ்ரீ மீனாக்ஷியை நமஸ்கரிக்கிறேன்.

(2)

मुक्ताहारलसत्किरीटरुचिरां पूर्णेन्दुवक्त्रप्रभां
शिञ्जन्नूपुरकिंकिणीमणिधरां पद्मप्रभाभासुराम् ।
सर्वाभीष्टफलप्रदां गिरिसुतां वाणीरमासेवितां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारान्निधिम् ॥

முக்தாஹார லஸத்கிரீட ருசிராம்
பூர்ணேந்து - வக்த்ர ப்ரபாம்
சிஞ்ஜந்நூபுர கிங்கிணீ மணிதராம்
பத்மப்ரபா பாஸுராம்।
ஸர்வாபீஷ்ட பலப்ரதாம் கிரிஸுதாம்
வாணீ ரமாஸேவிதாம்
மீனாக்ஷீம் ப்ரணதோ஽ஸ்மிஸந்ததமஹம்
காருண்யவாராம் நிதிம்॥

முத்துமாலையும், கிரீடமும் அணிந்து பூர்ண சந்திரன் போன்ற முகப்பொலிவுடன் விளங்குகிறாள் மீனாக்ஷி. ஒலிக்கின்ற காற் சதங்கை மணிகளைக் கொண்டவளாய், தாமரை மலரையொத்த ப்ரபையுடனும் இருக்கிறாள். அனைவரின் விருப்பத்தையும் நிறைவேற்றி, ஸரஸ்வதீ - லக்ஷ்மி தேவியரால் சேவிக்கப்பட்டும், கருணைகடலாயும் மிளிர்கின்ற ஸ்ரீ மீனாக்ஷியை நமஸ்கரிக்கிறேன்.

(3)

श्रीविद्यां शिववामभागनिलयां ह्रींकारमन्त्रोज्ज्वलां
श्रीचक्राङ्कितबिन्दुमध्यवसतिं श्रीमत्सभानायकीम् ।
श्रीमत्षण्मुखविघ्नराजजननीं श्रीमज्जगन्मोहिनीं
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारान्निधिम् ॥

ஸ்ரீவித்யாம் சிவவாமபாக நிலயாம்
ஹ்ரீங்கார மந்த்ரோஜ்வலாம்
ஸ்ரீ சக்ராங்கித பிந்துமத்யவஸதிம்
ஸ்ரீமத்ஸபாநாயகீம்।
ஸ்ரீமத் ஷண்முக விக்னராஜ ஜனனீம்
ஸ்ரீமத் ஜகன்மோஹினீம்
மீனாக்ஷீம் ப்ரணதோ஽ஸ்மிஸந்ததமஹம்
காருண்யவாராம் நிதிம்॥

ஸ்ரீவித்யையாகவும், சிவனின் இடது பாகத்தில் ஹ்ரீம்' என்ற மந்த்ரத்தால் பிரகாசிப்பவளாயும், ஸ்ரீ சக்ரத்தில் பிந்து நடுவே வசிப்பவளாயும், ஸபாநாயகியாகவும், ஸ்ரீ ஷண்முகர், கணபதி ஆகியோரின் மாதாவாகவும், ஜகத்தை ஆகர்ஷிப்பவளாயும், கருணைக் கடலாயுமுள்ள ஸ்ரீ மீனாக்ஷியை நமஸ்கரிக்கிறேன்.

(4)

श्रीमत्सुन्दरनायकीं भयहरां ज्ञानप्रदां निर्मलां
श्यामाभां कमलासनार्चितपदां नारायणस्यानुजाम्।
वीणावेणुमृदङ्गवाद्यरसिकां नानाविधाडम्बिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारान्निधिम्॥

ஸ்ரீமத் ஸுந்தரநாயகீம் பயஹராம்
ஜ்ஞானப்ரதாம் நிர்மலாம்
ச்யாமாபாம் கமலாஸனார்சிதபதாம்
நாராயணஸ்யானுஜாம்।
வீணாவேணு ம்ருதங்கவாத்ய ரஸிகாம்
நாநாவிதா டம்பிகாம்
மீனாக்ஷீம் ப்ரணதோ஽ஸ்மி ஸந்ததமஹம்
காருண்ய வாராம் நிதிம்॥

பயத்தைப் போக்கி ஜ்ஞானத்தையளிக்கும் நித்யசுத்த அழகம்மையாக கரிய திருமேனியுடன் காட்சி தருகிறாள். அவள் பிரமன் போற்றும் திருவடியுடையவள். ஸ்ரீ நாராயணரின் ஸஹோதரி. வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலிய வாத்யங்களை ரஸிப்பவள், பற்பல ஆடம்பரம் உடையவள். அந்த கருணைக்கடலான மீனாக்ஷியை நமஸ்கரிக்கிறேன்.

(5)

नानायोगिमुनीन्द्रहृन्निवसतिं नानार्थसिद्धिप्रदां
नानापुष्पविराजितांघ्रियुगलां नारायणेनार्चिताम् ।
नादब्रह्ममयीं परात्परतरां नानार्थतत्वात्मिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारान्निधिम् ॥

நாநாயோகி முனீந்த்ரஹ்ருந்நிவஸதிம்
நாநார்த்தஸித்தி ப்ரதாம்
நாநாபுஷ்ப விராஜிதாங்க்ரியுகலாம்
நாராயணே நார்சிதாம்।
நாதப்ரஹ்ம மயீம் பராத்பரதராம்
நாநார்த்ததத்வாத்மிகாம்
மீனாக்ஷீம் ப்ரணதோ஽ஸ்மி ஸந்ததமஹம்
காருண்யவாராம் நிதிம்॥

பற்பல யோகிகள் முனிவர்கள் ஆகியோரின் ஹ்ருதயத்தில் குடிகொண்டு பற்பல ஸித்தியருளுபவள். பலவித புஷ்பங்களால் திருவடியில் பூஜிக்கப்பட்டவள், ஸ்ரீ நாராயணரின் போற்றுதலுக்குரியவள். நாதப்ரஹ்மமானவள், பரத்திற்கும் பரமானவள், தத்வஸ்ரூபிணியுமாவாள். அந்த மீனாக்ஷியை நமஸ்கரிக்கிறேன்.

ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம் முற்றிற்று